co-operatives were started in 1957–58 to benefit 981 Harijans. Subsidies in the shape of tools and materials were given to 680 technically trained persons to settle down in trade or business.

(*b*) A sum of Rs. 23·82 lakhs was allotted for these special schemes in 1957–58.

SRI P. G. MANICKAM : ஒவ்வொரு ஜில்லாவிலுமுள்ள ஹரிஜனங்களுடைய பொருளாதார நிலை உயர வேண்டுமென்றால் ஆங்காங்கு கைத்தொழில் பயிற்சி நிலையங்கள் ஏற்படுத்துவது அவசியமென்பது எல்லோரும் ஒப்புக்கொள்ள கூடிய விஷயமாகையால் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கைத்தொழில் பயிற்சி நிலையம் ஏற்படுத்த சர்க்கார் நடவடிக்கைகள் எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : கூட்டுறவு முறையில் எங்கெல்லாம் கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றனவோ அங்கெல்லாம் வேண்டிய உதவி அளிக்கப்பட்டு வருகிறது. அவைகளில் பயிற்சி பெறுகிறவர்களுக்கு மான்யமும் அளிக்கப்பட்டு வருகிறது.

SRI M. D. THIAGARAJA PILLAI : ஹரிஜன முன்னேற்றத்திற்காக அநேக லட்சக்கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருந்தபோதிலும் ஒவ்வொரு சேரியிலிருந்தும் மிக அவசியமான குடி தண்ணீர் வசதி, ரஸ்தா வசதி போதாது என்று வருகிற அநேக மகஜர்களைப் பரிசீலனை செய்து திட்டங்களை நிறைவேற்றுவதற்கு, போதிய இன்ஸ்பெக்டர்கள் இல்லாததால் மிகத் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே அதிகப்படி இன்ஸ்பெக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இக்கேள்வி, ஹரிஜனங்களின் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவருவதற்கான கேள்வியாகும். ஹரிஜனங்கள் வாழ்கிற இடங்களில் பாதைகள் இல்லாவிட்டால் நிலத்தை அக்வயர் செய்து பாதைகள் அமைக்க துரிதமாக ஏற்பாடுகள் செய்யப்படும்.

SRI S. LAZAR : அமைச்சர் அவர்கள் எடுத்துச்சொல்லிய சலுகைகளும், வசதிகளும் ஹரிஜன கிருஸ்துவர்களுக்கு கொடுக்கப்படுகிறதா ? அப்படி கொடுக்கப்படாததற்கு காரணங்கள் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : இவை, ஹரிஜன கிருஸ்துவர்களுக்கு கிடையாது. மத்திய அரசாங்கம் எந்த அடிப்படையில் இந்த நிதியை கொடுக்கிறதோ அந்த அடிப்படையில்தான் செலவழிக்கப்படுகிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Pablo boats*

MR. SPEAKER : The hon. Member Sri M. Jagannathan is not in his seat. The question and answer will be printed in the official proceedings.

(Sri A. A. Rasheed rose.)

MR. SPEAKER : If the hon. Member wants to put the question, he must get up quickly.

* 126 *Q.*—SRI A. A. RASHEED (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of Pablo type fishing boats distributed so far to the South Arcot district;

9th February 1959]

(b) the number of boats distributed to each of the places in the district; and

(c) the number of boats distributed to Cuddalore areas?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (a) Five.

(b) Sonakuppam—Two.

Killai—One.

Porto Novo—One.

Cuddalore—One.

(c) Three.

*Nathaswaram*

*127 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நாதஸ்வரம் செய்யும் தொழிலை வளர்க்கத் திட்டம் ஏதேனுமுண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No, Sir.

(b) Does not arise.

SRI A. VEDARATHNAM: இந்தத் தொழில் தெரிந்தவர்கள் மிகச்சிலரேயிருப்பதால் இந்த நாதஸ்வரம் செய்கிற தொழிலுக்கு நாம் புத்துயிர் கொடுக்கவில்லையானால் அடுத்த தலைமுறையில் இந்த வேலை செய்கிற ஆட்களே இல்லாமல் போய்விடுவார்கள். அதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய யோசித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எனக்குத் தெரிந்த வரையில் இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள், தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள நரசிங்கம்பேட்டை என்ற கிராமத்தில்தான் செய்கிறார்கள். இதைச் செய்வதில் கஷ்டமொன்றுமில்லை. வீணை செய்வது போல் அல்ல. மேலும் அகிலயிந்தியா ஹான்ட்டிகிராப்ட்ஸ் போர்ட் அரசாங்க உதவிபெற்று சங்கீதவாத்யாலயம் ஒன்றை சென்னையில் அமைத்திருக்கிறது. அதிலுள்ள மாணவர்களுக்கு சங்கீத கருவிகள் செய்ய சொல்லிக்கொடுக்கப்படுகிறது. அதில் நாதஸ்வரமும் செய்யலாம்.

SRI M.R. KANDASWAMI MUDALIYAR: இது, கலைகளில் மிகச் சிறந்த கலையாக இருப்பதால் இது வளர்ச்சி பெறுவது அவசியம். ஆகவே இந்தக் கலையில் பயிற்சி பெறக் கூடியவர்களுக்கு அரசாங்கம் ஏதாவது ஒத்தாசை புரிகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இது, நாதஸ்வரம் செய்வதைப் பற்றிய கேள்வி. கலையைப் பற்றியதல்ல. கலைப் பயிற்சிக்கு ஆதரவு கொடுக்க தேவஸ்தானங்கள் சார்பாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது.